உ

சிவமயம்.

# ஸ்ரீ அருணந்திதேவநாயனார்

## குருபூஜை வெளியீடு

திருத்துறையூர்

விசய — புரட்டாசி — பூரநாள்.

திருவாவடுதுறை ஆதீனவெளியீடு 73.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# அரிகர தாரதம்மியம்.

# பரப்பிரம விளக்கம்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்
கட்டளையிட்டருளியபடி

அவ்வாதீன வித்துவான்
த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளையால்
பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.

1953. விசய—புரட்டாசி
பூரநாள்

" குருமணி மோலித் துருவன் பிணித்த கொழுங்கயிற்றின்
ஒருவுதல் கோளுக் கிலையெத் திசையி னுறினுமவ்வா
றருண்மணி யாகிய பஞ்சாக கரவ வடியெனுநின்
திருவடி நீங்காத் திறம்யாங் கிருப்பினுஞ் செய்தருளே "

—பஞ்சாக்கரதேசிகரந்தாதி.

அச்சிட்டது
ஸ்ரீ முருகன் அச்சகம்,
கும்பகோணம்.



இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்.

உ

சிவமயம்.

# முகவுரை.

'சிவனுக்குமேல் தெய்வமில்லை சித்திக்குமேல் நூல் இல்லை' என்பது ஒரு பழமொழி. சித்தி என்பது 'சிவஞான சித்தியார்' என்பதே: இதுமெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. இதனை அருளிச்செய்தவர்கள் ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாருடைய மாணவர் ஸ்ரீ அருணந்திதேவ நாயனார்; அவர்கள் அவதரித்த திருத்தலம் திருத்துறையூர், சிவபரிபூரணமான தலமும் அத்தலமே. அவர்கள் திருநட்சத்திரம் புரட்டாசிப் பூரநாள்.

இந்தப் புண்ணிய நாளிலே சிவபரத்துவத்தை நிலை நாட்டுவதற்குரிய சிறுநூல்கள் வெளியாகின்றன. ஒன்று 'அரிகரதாரதம்மியம்'; மற்றொன்று 'பரப்பிரம விளக்கம்'. முன்னதாகிய நூல் வடமொழியில் ஸ்ரீ ஹரதத்த சிவாசாரியரால் அருளிச்செய்யப்பட்டது. சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் என்னும் நூலை அருளிய பெரியாரும் அவரே. பற்பல அற்புதங்களால் சைவஸ்தாபனம் செய்து கஞ்சனூரிலே வதிந்தவர்கள். சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தைத் தமிழிலே மொழிபெயர்த்து இயற்றியவர்கள் இவ்வாதீனத்து வித்துவசிகாமணி ஸ்ரீ சபாபதி நாவலரவர்கள். வடமொழியிலே ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் செய்தருளிய இராமாயண தாற்பரிய சங்கிரகம், பாரததாற்பரிய சங்கிரகம் ஆகிய இவ்விருநூல்களையும் மொழிபெயர்த்தவர்களும் அவர்களேயாவர். வடமொழியிலே ஸ்ரீ அப்பதீக்ஷிதரால் செய்யப்பட்டுள்ள சிகரிணிமாலை என வழங்கும் சிவதத்துவ விவேகம் என்னும் நூலை ஸ்ரீ பாஷ்யகாரராகிய— மாதவச் சிவஞானயோகிகள் தமிழிலே மொழிபெயர்த்தருளினார்

கள். இந்த நூல்களெல்லாம் சைவர்கள் நன்கு பயன்று சிவபெருமானது பெருமையை உணர்ந்து அப்பெருமானிடம் அன்பு செலுத்தற்கண் ஊக்கி நிற்கும் சிறப்புவாய்ந்தனவாம்; முழுமுதற்கடவுள் சிவபெருமானே என நன்கு உணர்தற்கு வாய்ப்பாக உள்ளன.

இனி, சிவஞான சித்தியார் சுபக்கத்திலே முதற் சூத்திரம் இரண்டாம் அதிகரணத்தும், இரண்டாம் சூத்திரத்தும் ஓதிய விசுவதிகன், விச்சுவகாரணன், விச்சுவத்திற்கந்தர்யாமி, விச்சுவரூபி என்பவைகளின் விளக்கப்பகுதிகள் சிந்தித்துணர்தற்குரியன. விச்சுவாசேவியன் சிவபெருமானே. அழிகுலத்திற் பிறந்தோரே சிவபிரானைப் பரிகசிக்கின்றனர் எனப் புராகவுதம் கூறுகின்றது. சிவபெருமான் திருவடிப்பத்தி பல பிறவிகளிலும் செய்த தவமுடையார்க்கே ஆகும். முன்னைப்பல பிறவிகளிலும் மேலான தவங்களைச் செய்தவர்களும், மனத்தில்உள்ள அறியாமையை நீக்கினவர்களும், இயமம், நியமம் முதலிய நற்காரியங்களைச் செய்தவர்களுமே சிவபெருமானை அடைய விரும்புவார்கள். இவ்வாறாக, கலியின் குற்றம் பொருந்தியவர்களும், அசுரக் கொடுமையுடையவர்களும், ததீசி முதலியோரால் சபிக்கப்பட்டவர்களும் ஆகிய பிறர் சிவபெருமானை எவ்வாறு அடைவார்கள்? சர்வைசுவரிய சம்பன்னன் சிவபெருமானே, அவரே முதற்காரணர். அவர் ஒருவரே தியானிக்கப்படுபவர்" என் அதர்வ சிகோபநிடதம் கூறுகின்றது. "சிவபெருமானது பெருமையை அறிதற்கும், அப்பெருமான்பால் அன்பு செய்தற்கும், அப்பெருமானை அருச்சித்து அருள் பெறுதற்கும் திருமால் ஒருவரே தகுதியுடையவர்' எனச் சிவதத்துவவிவேகம் கூறுகிறது. ஸ்ரீ ஆறுமுகநாவலவர்கள் பெரிய புராண சூசனத்திலே சிவபரத்துவம் கூறுமிடத்து அப்பைய தீக்ஷிதர் செய்த சிவதத்துவவிவேக வியாக்கியானத்தை அப்படியே எடுத்து ஆண்டிருக்கின்றமை காண்க.

இனி, இந்த அரிகரதாரதம்மியத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர் திருஞானசம்பந்தப்பிள்ளை என்பவர். இவர் ஊர் யாழ்ப்பாணத்து நல்லூர், சாதியால் வேளாளர், சமயத்தால் சித்தாந்த

சைவர் இவர். ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களுக்கும் ஸ்ரீ பொன்னம்பலபிள்ளையவர்களுக்கும் மாணவர், இலக்கண இலக்கிய நூல்களும், தருக்கநூலும், சித்தாந்த சாத்திரமும் கற்றவர். தருக்க சாத்திர ஆராய்ச்சியிலும் தர்க்கவாதம் செய்தலிலும் மிக்க வேட்கையுடையவர். தர்க்க குடார தாலுதாரி எனச்சிறப்புப் பெற்றவர். கும்பகோணத்திலும், சிதம்பரத்திலும் பலநாள் வசித்தவர். இவர் மாணவர் பலர். இவர் இயற்றிய நூல்கள் தர்க்காமிர்த மொழிபெயர்ப்பு, அரிகரதாரதம்மியம், வேதாகமவாத தீபிகை, நாராயணபரத்துவநிரசனம் முதலியன என்பர். இவர் கும்பகோணத்திலிருந்தபோது திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமான பேட்டைத்தெரு மடத்திலே தங்கியிருந்தார் என்ப. 'அரிகர தாரதம்மியம்' அச்சிட்டகாலம் (கி. பி. 1895) மன்மத-ஆனி.

இனி, மற்றொரு நூலாகிய பரப்பிரமவிளக்கத்தைச் செய்தவர்கள் வரகவி—ஸ்ரீ காளமேகப்புலவர். இவர் ஆசுகவி. திருவானைக்கா ஸ்ரீ அகிலாண்டேசுவரியின் திருவருள் மிகப்பெற்றவர். இவர் இயற்பெயர் வரதர் என்பது. கும்பகோணத்தில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். (கி. பி. 1337—1360 ஏகாம்பர சம்புவராயன் காலம்) இவர் காலத்துப் புலவர்கள் ஆதி மதுரகவி, சம்பந்தாண்டான், அருணகிரிநாதர், இரட்டைப்புலவர், வில்லிபுத்தூரார், இவர் மகனார் வருந்தருவார் என்பவர். இவர் பதினன்காம்நூற்றாண்டினர். இவர்பாடல்கள், தனிப்பாடல் திரட்டில் மிகஉள்ளன. காளமேகப் புலவர் வரலாறு திருவானைக்காவுலாவின் முகவுரையால் அறியலாம்.

பரப்பிரம விளக்கம் என்னும்நூல் முழுவதும் கிடைக்கவில்லை. கிடைத்த சில செய்யுட்களையேனும் பாதுகாத்துவைத்தல் சைவர்கட்குரிய பெருங்கடமை. இந்நூல் அச்சிட்ட காலம் கலி—4963: துன்மதி—புரட்டாசி (கி. பி. 1861) அப்போது இதனை அச்சிட்டவர் பெரிய காஞ்சிபுரம்—இராமலிங்க தேசிகர் என்பவர். அதன்பின் இவ்வாதீனத்து வித்துவான் ஸ்ரீசுப்பிரமணியக்கவிராயரவர்களாலும், மதுரை அரிகரம் அவர்களாலும் அச்சிடப்பட்டுள. அப்பிரதிகள்

கிடைப்பது மிக அருமை. ஆதலின், இன்று இவ்வெளியீடு ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமஹாசந்நிதானம் அவர்கள் திருவருட்பெருக்கால் சைவ நன்மக்கட்கு விருந்தாக அச்சிடப்பட்டுள்ளது. குற்றம் பொறுத்தருள்க.

*இங்ஙனம்,*

*சித்தாந்தசைவமணி—*

**த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை,**

ஆதீன வித்துவான்.

*திருவாவடுதுறை,*

**3—10—53.**

---

குறிப்பு :—*இப்புத்தகம் வேண்டுவோர் ஆதீனம் சரஸ்வதிமஹால் லைபரேரியன் அவர்களுக்கு நான்கணு தபால்தலைச்சீட்டு அனுப்பிப்பெற்றுக்கொள்க. ஒருவர் ஒரு புத்தகமே பெறலாம்.*

உ

சிவமயம்.

# உபோற்காதம்

அநாதிமல சகிதராகிய ஆன்மாக்கட்குப் பசுத்துவ நீக்க முஞ் சிவத்துவ விளக்கமுஞ் சித்தித்தற் பொருட்டு, முதற் காரணத்தினின்றும் காரியங்களை வெளிப்படுத்துதலாகிய சிருட்டியும், வெளிப்படுத்தப்பட்ட காரியங்களைத் தத்தந் தொழிற்கண் நிலை பெற நிறுத்துதலாகிய திதியும், காரியங்களை முதற்காரணத்தின் ஒடுக்குதலாகிய சங்காரமும், ஆன்மாக்களைத் தத்தம் வாசனைக்குப் போகத்தின்கண் வழுவாதிருக்கச் செய்தலாகிய திரோபவமும், தீக்ஷா கிருத்தியமாகிய அநுக்கிரகமும் எனப்படும் பஞ்சகிருத்தியங்களையும், நம்மனோர் போலக் காணத்தான் இயற்றாது "இஃதிவ்வாறாகுக," வென்றெண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையான் இயற்றுபவர் எவர்? அவரே பரமபதி. அவரொருவரே எல்லாவற்றையு மறிந்து எல்லாவற்றையும் இயற்றவேண்டுதலின் அவர் மாட்டு எல்லாவற்றையும் புலப்படக் காணும் முற்றறிவும், எல்லாவற்றையுந் தடையின்றி யியற்றும் முற்றுத்தொழிலும் வேண்டுமன்றே! அவ்விரண்டும் யாவர்மாட் டுளவென்று ஆராயுங்கால், அவை அநாதிமலரகிதராகிய சிவபிரான் மாட்டே யுளவென்பது பிறர்க் குரித்தாகாத சிவன் என்னுந் திருநாமத்தாற் புலப்படுகின்றது. சிவன் என்னும் பதத்திற்கு முற்றறிவு முற்றுத்தொழிலாகிய சிவத்துவம் இயைந்தவனென்பது பொருளாமாகலான்.

இன்னும், சுத்தமாயாமயமாகிய கல்லாலின்கீழ் மந்திர சிம்மாசனத்தின் இருந்து திருநந்திதேவர், சனற்குமாரமுனிவர் முதலாயினோர்க்குச் சிவஞானத்தை யுபதேசித்தமையானும், சர்வான்மாக்களும் உய்தற்பொருட்டு ஈசானமுதலிய பஞ்ச வத்திரங்களி

னின்றுங் காமிக முதலிய சிவாகமம் இருபத்தெட்டையும் இருக்கு முதலிய வேதங்கள் நான்கையுந் தோற்றுவித்தமையானும் முற்றறிவும், இராவணனை வருத்தினமையானும், இயமனை வதைத்தமையானும், திரிபுரத்தையுங் காமனையுந் தகித்தமையானும், பிரமன் தக்கன் முதலாயினோருடைய சிரங்களை யரிந்தமையானும், விடத்தைக் குடித்தமையானும் முற்றுத்தொழிலும் அச்சிவபிரான் மாட்டு உளவென்பது நன்றாக நிச்சயிக்கப்படும்.

இவற்றை "நற்றவஞ்செய்த நால்வர்க்கு நல்லற முற்ற வண்மொழி யாலருள் செய்தவன்." எனவும், "நல்லூரார் ஞானத்தார் ஞானமாவார் நான்மறையோடாறங்க நவின்ற நாவார்." எனவும், "இலங்கை மன்னனிருபது தோளிற-நலங்கொள் பாதத் தொருவிர லூன்றினான்." எனவும், "நறைகொள் பூம்புனல்கொண் டெழுமாணிக்காய்க்-குறைவிலாத வெங் கூற்றுதைத் திட்டவன்." எனவும், "விண்டவர் புரமூன்று மெரிகொளத்—திண்டிறற்சிலை யாலெரி செய்தவன்." எனவும், "தென்ற னன்னெடுந் தேருடை யானுடல்—பொன்ற வெங்கனல் பொன்ற விழித்தவன்." எனவும், "உள்ளிடத்துறைகின்ற வுருத்திரன் கிள்ளிடத்தலையற்ற தயனுக்கே." எனவும், "தக்கனையு மெச்சனையுந் தலையறுத்துத் தேவர்கணந்—தொக்கன வந்தவர் தம்மைத் தொலைத்தது தானென்னேடீ." எனவும், 'கோலாலமாகிக் குரைகடல்வா யன் றெழுந்த—ஆலாலமுண்டா னவன்சதுர்தானென்னேடீ." எனவும் வருஞ் சுருதிகளானு முணர்க.

இனி நாராயணன் "சிவபிரானே ஈசுரன்." எனச்சிவபிரான், உமாதேவியார் திருநந்தி தேவர் முதலியோர் உணர்த்த வுணர்ந்தமையானும் உபமன்னியு, அகத்தியர், வசிட்டர், விசுவாமித்திரர் முதலிய முனிவர்பால் உபதேசம் பெற்றமையானும், மாயமானைப் பொன்மானென்றும், மாயாசீதையைத் தன்மனைவியென்றும் மயங்கினமையானும், வாலிக்குஞ் சுக்கிரீவற்கும் பேதமுணராது விழித்தமையானும், தன்மனையாளை இழுத்துக்

கொண்டு சென்றவனையுஞ் சென்றவிடத்தையும் உணராது அழுது திரிந்தமையானும் அவன் பால் முற்றறிவின் றென்பதூஉம், "நானே யீசுரன்" எனமயங்கிய ஞான்று காத்தற் றொழிலுங் கைகூடா தொழிந்தமையானும், காலகூடத்திற் கஞ்சிக் கைலாசம் புக்கமையானும், சிவபிரான் மாரனது சரீரத்தை யெரித்த ஞான்றும், பிரமன்றுசிரஞ்ச யரிந்த ஞான்றும் அவ்விரு புத்திரரையும் புரக்காமையானும், சலந்தரன் சூரன் முதலிய வசுரர்கட்கு அஞ்சித்திரிந்தமையானும். புத்திரப்பேற்றின் பொருட்டுக் கைலாசத்தில் அருந்தவம் புரிந்தமையானும், பாசுபதத்தின் பொருட்டுக் கைலாச யாத்திரை புரிந்தமையானும், இராவணனைக் கோறற்கு வன்மையின்றி அகத்திய முனிவர்பால் ஆதித்திய ஹிருதயோபதேசம் பெற்றமையானும், குரங்கினோ டெதிர்நின்று அமர்புரியும் ஆற்றலின்மையானும் முற்றுத்தொழில் இன்றென்பதூஉந் தெற்றென வுணர்க.

இதுகாறுங் கூறிய வாற்றால், நாராயணன் சிற்றறிவு சிறு தொழில் உடைய பசுவே யென்பதூஉம், அப்பசுவிற்குண்ணின் றுணர்த்திக் காத்தருள்புரியும் பசுபதி முற்றறிவு முற்றுத்தொழில் உடைய சிவபிரானே யென்பதூஉம் பசுமரத்தாணி போல்பதித்து காட்டப்பட்டன.

மேற்கூறிய வியல்புடைய சிவசம்பந்தமாயுள்ள சமயம் சைவ சமயம் எனப்படும். சமயம் என்பதற்கு மார்க்கம் என்பது பொருளாகலாற் சிவனை வழிபடும் மார்க்கம் சைவம் எனப்படும். உலோகாயதம் பௌத்தம் முதலிய முன்முன்னுள்ள சமயங்கள் பின்பின்னுள்ள சமயங்களால் வாதிக்கப்படும். வாதிக்கப்படுவது பூர்வபக்ஷமும் வாதிப்பது சித்தாந்தமுமாம். சைவசமயம் மற்ற எச் சமயங்களையும் பூர்வபக்ஷம் பண்ணி நிற்றலானும் அதனைப் பூர்வபக்ஷம் பண்ணுவதற்கு ஒரு சமயமும் இன்மையானும் அதுவே சித்தாந்தம் எனப்படும். ஆகலான், இதுவே சற்சமயம் என்க. இதனைச் "சித்தாந்தமே சித்தாந்தம்; சித்தாந்தத்திற்கு வேறு

னவை பூர்வபக்ஷங்கள்." எனவும், "சைவசமயமே சமயம்." எனவும், சைவத்தின் மேற்சமயம் வேறிலே யதிற்சார் சிவமாந், தெய்வத்தின்மேற் றெய்வமில்லெனு நான்மறை." எனவும் வரும் ஆன்றோர் வாக்குகளானுந் தெளிவுபெற வுணர்க.

இதனாலன்றே அகஸ்தியர், பதஞ்சலி வியாக்கிரபாதர், வியாசர், சுகர், பராசர், வசிட்டர், முதலிய முனிவர்களும், நாராயணன், பிரமன், இந்திரன் முதலியதேவர்களும், மநு, இராமன், கிருஷ்ணன், அர்ச்சுனன் முதலிய பிறருஞ் சைவசமயத்தில் நின்று, வேண்டுவார் வேண்டியதே ஈயுங் கிருபா சமுத்திரமாகிய சிவபிரானைப் பேரன்போடு முபாசித்துச் சித்தி முத்திகளைப் பெற்றனர். இன்னும், வைணவ மதத்தராகிய ஹரதத்த சிவாசாரியர், காளமேகப்புலவர் முதலிய பேரறிஞர்கள், தஞ்சமயமாகிய வைஷ்ணவமதம் பொய்யெனக் கண்டு உவர்த்து, சத்தியமெனக் கண்ட "சைவசமயத்திற் பிரவேசித்துச், சிவபிரானை வழிபட்டு, அவனருள்பெற்று, வைஷ்ணவ மதத்தைக் கண்டித்து அநேக நூல்களை யியற்றி, உயர்கதி யடைந்தமையே யாங்கூறியதற்குப் போதிய சான்றா மென்க.

இங்ஙனமாகவும், சைவருள், "கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறே, நிற்புறத் தவரை நாடா நியாங்களு மின்ப வாழ்வுந், தற்பர மாக நல்குந் தலைவனின் னலதோர் தெய்வம், பொற்புறக் கருதேனுங் கண்டாய் பூரணா னந்த வாழ்வே," எனப் பிரசித்தமாய் வழங்குந் தாயுமானவர் திருவாக்கையும் உலகத்தவர் துட்டராகிய பாலர்களைப் பார்த்து "சிவனே யென்று சும்மா விருக்கக்கூடாதா?" எனக் கூறும் உலக வழக்கையும் உணராத அநேகர் பலகலையை ஆயாமையானும், ஆய்ந்திடுந் தூய வருந்தவர்பாற் போயாயினும் உண்மையைத் தெளியாமையானும், "அரனரியென்னு மிருவருஞ் சமமெனவறியாதார் மூடரே." எனக்கூறி, அவ்விருவரையுஞ் சமமென மதித்து வழிபட்டுக், "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும், உள்ளேன் பிறதெய்வம் உன்னை

யல்லா தெங்க ளுத்தமனே." எனவும், "உன்னலாகா நஞ்சு கண்டத் தண்டடனே யொடுக்கி, யண்ணலாகா வண்ண நீழ லாரழல் போலுருவ, மெண்ணலாகா வல்வினையென்... றன்க வலித்திருவர், நண்ணலாகா நம்பெருமான் மேயது நன்னாறே." எனவும், "சென்று நாஞ் சிறு தெய்வஞ்சேர்வோ மல்லோஞ் சிவபெருமான் றிருவடியே சேரப்பெற்றேம்." எனவும் 'மாலொடு நான்முகன் இந்திரன் மந்திரத்தால் வணங்க நீலநஞ் சுண்டவர்." எனவும், "சிவனோடொக்குந் தெய்வந் தேடினுமில்லை யவனொ டொப்பாரிங் கியாவருமில்லை." எனவும், கூறியருளிய சமயகுரவர் முதலியோரையும் அறியாதவர்களென நிந்தியாது நிந்தித்து எரிவாய் நிரயத்திற் கிரையாகின்றனர்.

இவர்க்கு, ஆன்மாக்க ளெல்லாம் வீடுபெற்றுய்யச் சிவபிரா னது திருவருளாற் கம்சபுரத்தி லவதரித்துச் சதுர்வேத தாற் பரிய சங்கிரகம் என்னும் நூலையியற்றியதும் பலவற்புதங்களைச் செய்தும், சைவசமயமே சற்சமயம் எனத்தாபித்த ஸ்ரீஹரதத்த சிவாசாரியர், அரிக்கும் அரனுக்கும் வேதம் புராணம் பாரதம் இரா மாயண முதலியவற்றில் இலைமறைகாய்போற் குறிப்பாகவும் வெளிப்படையாகவுங் கூறப்பட்ட ஏற்றத்தாழ்வுகளை யொருங்கு திரட்டி வடமொழியில் இயற்றிய அரிகாதாரதம்மியத்தை, அறி வுறுத்தற் பொருட்டு, தென்மொழியிற் செய்யுள் நடையில்; வட மொழியில் எல்லாச்சுலோகங்கட்கும் உத்தரார்த்தம் ஒன்றாயினாற் போல உத்தரார்த்தம் எல்லாச்செய்யுள்கட்கும் ஒன்றும்படி சுருங்கச் சொல்லன் முதலிய வழகுடன் ஸ்ரீ தர்க்ககுடார தாலுதாரி என்ப வர் இயற்றினர். அது எல்லார்க்கும்பயன்படும் பொருட்டு யாம் அச்சிட்டேம். விவேகிகளாய்ப் பசுபதியாகிய சிவபிரானை யடைந்து வழிபட்டு வீடுபேற்றைப் பெறமுயலுஞ் சைவர்கள் இதனைச் சித்தசமாதானத்தோடு வாசித்துணர்ந்து சிவபிரான் திருவடியே சிந்தித்து இகபரலாபங்களைப் பெற்றுய்யக்கடவர்.

திருச்சிற்றம்பலம்.

உ

## சிவமயம்.

உயர்கா யத்திரிக் குரிப்பொரு ளாகலின்
தசரதன் மதலை தாபித் தேத்தலின்
கண்ணன் கைலையி னண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலின்
தனாது விழியுட னொராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலின்
ஆங்கவர்க் கிரங்கி யாழியீந் தருடலின்
ஐங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலின்
அமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலின்
தென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலின்
அவணர் முப்புர மழியவில் வாங்கலின்
தக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலின்
தனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்
மானுட மடங்கலை வலிதபக் கோறலின்
மாயோன் மகடூஉ வாகிய காலைத்
தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்
ஆழ்கடல் வரைப்பி னான்றோ ரனேகர்
அன்புமீ தூர வருச்சனை யாற்றலின்
நான்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலின்
ஐயிரு பிறப்பினு மரியருச் சித்தலின்
இருவரு மன்னமு மேனமு மாகி
அடிமுடி தேட வழற்பிழம் பாகலின்
பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையின்
கங்கை சூழ்கிடந்த காசிமால் வரைப்பில்
பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்
முப்புர மெரிப்புழி முகுந்தப் புத்தேள்
மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலின்
அயன்சிர மாலை யளவில வணிதலின்
ஞானமும் வீடும் பேணினர்க் குதவலின்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுள்
உம்பர்க ளெவர்க்கு முயர்ந்தோன்
என்பது தெளிக வியல்புணர்ந் தோரே.

திருச்சிற்றம்பலம்.

உ

ஓம்.

சிவமயம்.

# அரிகரதாரதம்மியம்.

## பரசிவவணக்கம்.

உலகினை துருவ மாயு முலகினிற் கப்பா லாயும்
உலகினின் மறைந்த தாயு முலகினிற் கேது வாயும்
இலகுறு பரசி வத்தை யெணுமிட்ட சித்தி யெய்த
அலகிலா வருளாற் சேவை செய்குது மகில மீதே.

## நூல்.

ஒருவனாய ருலகஞ்ச வருகாள கூடமதை யருளா லுண்டான், ஒருவனிழி பூதனையின் தனத்தினூ மற்பவிட முண்டா னீண் டிவ், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (1)

ஒருவனிரா வணற்பங்கம் புரிந்தனனா லொருசாண நகாக்கி ரத்தாற், பொருகளத்தி னொருவனனி வருத்தமுறீஇ மற்றவற்பங் கம்புரிந்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசை த் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (2)

விரிவையுறு சமுத்திரத்தி னுலிலைபள் ளியாக்கொண்டா னொருவன் வேகத், திரிபுரத்தை யெரிக்குங்கா லொருவனலை கடல்சரதி யாகச் செய்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (3)

அரவுதனி லொருவனனி துயிலாநின் றுனென்று மருளான் மற்றை, ஒருவனர வதனைக்கங் கணமாக வணிந்துநட முஞற்றுநின்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (4)

ஒருவனுயர் திரிபுரத்தைச் சிரிப்பினு லெரித்தனன்மற் றொருவன் றென்பால், மருவுறுமோ ரிலங்கையினை யெரித்தனன்மா ருதிகொடிந்த மாண்பி னுலிவ், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (5)

தரணிதலத் தொருவனவ நீதகண்டந் தரித்தனனன் னியன் வியோமம், வருநிகரில் சுதைமயமாஞ் சந்திரகண் டந்தரித்து வயங்கி னுனிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (6)

ஒருவனிழி வுறுமிடையர் மந்திரங்க ளிற்களித்தா னொருவனேங்கத், திரிகளினின் றுயர்மேரு சிகரத்துக் கந்தரங்க ளிற்களித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (7)

உருவிலியைப் புத்திரனாப் பெற்றனனிங் கொருவனன் னிய னன் முத்தி, தாவலவச் சத்திதாற் புத்திரனாப் பெற்றனனிச் சகத்தின் மீதிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (8)

ஒருவனிச்சை யொடுமகடூஉ வடிவமெடுத் தனன்முன்னா னுவமை யில்லாப், புருடனொரு வன்றனது கிரீடார்த்த மவ்வடி வைப் பொருந்த லுற்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (9)

திருடினா னொருவனிடைச் சியாகத்து வெண்ணெயினை யொருவன் றெய்வப், பொருவிலாப் புலவர்களுக் கருளினான் புனை யிலமு துணற்பொ ருட்டாங், கிருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (10)

ஒருவனவன் சகாமனெனப் பிரசித்தி பெறுமற்றை யொரு வன் சால்ப், பெருமைபெறு விகதகா மனெனவே பிரசித்தி பெறு மா லிந்த், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (11)

ஒருவனயி லாசுகத்தின் கதியையடைந் தான்காத்தி னாற்றான் மூன்று, புரமதனை வேறற்க ணவனையே வாத்தரித்தா னொருவன் போர்க்கண், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (12)

இரவிசசி யென்னுமிரு சேத்திரத்த னொருவனன் னியன்றா னியார்க்கும். இருளகற்று மிரவிசசி சிகியெனுமுச் சேத்திரத்தோ டியைந்தா னிந்த, இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (13)

ஒருவனனு தினமுமும்ப ருறுமிரவி மண்டலத்து ளுறைவ னந்த, இரவியது தசனமதை யுகுத்தொருவன் விசயத்தை யெய்தினானிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (14)

ஒருவனவன் றீனகச மதையளித்தற் கண்மதியை யுற்றா னொன்னார், வெருவரச்செய் மத்தகச மதையழித்தற் கண்மதிவே றொருவ னுற்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (15)

ஒருவனுயர் நாபியினிற் சரோருகத்துப் பிரமனவ னுதிக்கச் செய்தான், மருவுமவன் சிரத்தைநக நுதிகொடொரு வன்கொய்து வயங்கினானிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (16)

ஒருவனோ ரிடத்திலிந்த விசுவத்தின் வசித்தலினா லுவகை யுற்றான், கருதுமற்றை யவன்விசுவே சுரனெனவே யவனியினிற் கழறப் பெற்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (17)

ஒருவனுல கதனிற்கே சவனெனுநா மத்தையுற்ற ஞெருவ ஞர்ந்து, விரிசகத்து வியோமகே சன்னெனுநா மம்பெற்று விளங்கி னுல், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (18)

ஒருவன்விழி மலராலர்ச் சனைபுரிந்தா னெருவனவற் குவந்து தன்கை, விரவுறுபே ராற்றலமர் சக்கரத்தை வெற்றிபெற வழங்கி ஞன்மே, இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (19)

பரவையுறு சலமதனின் மூழ்கினனு லொருவனன் னியபார் மேவும், வாமுறுகற் கைலாச வரையினுயர் சிகரத்து வதிந்தான் மன்னே, இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (20)

ஒருவனா னமர்கைலா சத்தினுயர் தவமதனை யுஞற்றி னைச், சிரமமதைத் தேர்ந்தவொரு வன்சாம்ப னெனுஞ் சிறுவற் சிறக்க வீய்ந்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (21)

ஒருவனடைந் தனனீல நிறத்தைவிடந் தாக்குதலா னுடல முற்றும், கரியவிட முண்டவனைக் காத்தலினன் னியன்களமாத் திரங்க ளுத்தான் இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (22)

ஒருவனவன் றேனுவதஞ் செய்துபிர சித்திபெற்ற னொருவ னேங்கு, வரிபெறுமவ் வியாக்கிரத்தை வதஞ்செய்து பிரசித்தி வயங்கப் பெற்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (23)

ஒருவனிழி வுறுமட்ட விலக்குமியை யுறவனு மதிகற் சூரன், பிருதிவிநீ ரம்முதலா மட்டமூர்த் தங்களுறும் பிறங் கொருத்தன், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையி சைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (24)

ஒருவனூர்தி யுறுயமுனா நதியதனின் மூழ்கினனிங் கொருவன் வாய்ந்த, திரிபதகை யென்றுபெயர் பெற்றுயர்ந்த கங்கைநதி சிரந் தரித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (25)

ஒருவனணிந் தனன்கடியிற் சுவணவச னத்தினைமற் றொரு வன் மேனாட், காமுறவே தரித்தனனற் றோரணமெனக் கனக மால் வரையைக் காரார், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (26)

உரமதனிற் கௌத்துபமா மரதனத்தைத் தரித்தனனிங் கொருவன் மற்றை, வரமுடைய வாயிரமாப் பணத்திலுறு மணீந் திரமா லையைத் தரித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (27)

ஒருவனுரு நின்றனனிந் திரனநச ஞந்தன்மை யொருவன் விண்ணிற், புரமுறுமிந் திரனுதி வானவர்போற் றுறுந்தன்மை பொலியப் பெற்றான், இருவர்தமி லெவன்றிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (28)

மருமமதி லொருவனிலக் குமியைவகித் தந்தனத்தை வாஞ்சிப் பான்றாழ், சிரமதனி லிரந்துமொரு வன்பிறர்க்குப் பாக்கியத்தைச் சிறக்க வீவன், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (29)

தரணிதனி லொருவன்மா தவனெனவே பிரசித்தன் சகத்தின் மற்றை, ஒருவனுமா தவனெனவே பிரசித்தி பெறுவனிந்த வுண்மை யானே, இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (30)

ஒருவனுறு கோக்களொடு மியைந்து பிருந் தாவனத்தி லுழன்று ளனற்பூ, தரங்கர்ப்பூ தங்களொடு மியைந்துபிதிர் வனத்திலொருவன்சரித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (31)

ஒருவனொரு போதமதா வனுவையப கரித்தனன்மற் றொருவனுழ்ந்த, பாவையினி லெழுவிடத்தை யபகரித்தா னயன்முதலோர் பரவ வீண்டிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (32)

ஒருவனவன் கைடபனை வதம்புரிதற் கண்ணிபுண னொருவ னன்ற, வாமுறுசீ ரந்தகனை வதைத்தற்கண் ணிபுணனு வயங்கா நின்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (33)

ஒருவனிடை யர்கடொருவின் வேணுகா தஞ்செய்தா னுலக முற்றும், மருவிலய மாகுங்கா லொருவனட்ட காசத்தை மயங்கச் செய்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (34)

தரணிதனி லொருவனியோ னிசனெனவே பிரசித்தன் சகத்து மற்றை, ஒருவனயோ னிசனெனவே பிரசித்தி பெறுவ னிந்த வுண்மை யானிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (35)

தரணிதனி லொருவனனித் தியனெனவே பிரசித்தன் சகத்து மற்றை, ஒருவனித்தி யன்னெனவே பிரசித்தி பெறுவ னிந்த வுண்மை யானிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (36)

ஒருவனுர லொடுதுவக்குண் டானொருவ னுயிர்களெலாம் குறத்து வக்கிக், கருவுறுத்து மாணவத்தாற் றுவர்க்குண்டா னல்ல னெனக் கழறு மித்தால், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (37)

ஒருவனருச் சுனனிரதப் பரிக்குபசாரஞ்செய்தா னொருவ னந் தப், பிருதைசுத னாற்சமர முகத்துத்தோத் திரஞ்செய்யப் பெற்றா னீங்கிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (38)

ஒருவனவன் வியாபகத்தால் விட்டுணுவென் றொருநாம முற் றான் மூன்று, பெரியவுல கத்தொருவன் விட்டுணுவல் லபனென்று பேசப் பெற்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (39)

தாரணியினிற் சனார்த்தனனென் றொருபெயர்பெற் றுளனொரு வன் சகத்து மற்றை, ஒருவனுயர் சங்கரனென் றோங்குபெயர் பெற்றுளனா லுரைத்த விந்த, இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (40)

சுரர்களனை வரினுள்ளா மரசனொரு வன்சுரர்க ளனைவருள்ளும், ஒருவனுயர் வேதியனென் றுவமையிலா வாரணங்க ளுரையா நிற்கும், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (41)

ஒருவனையிங் குயர்யசுர்வே தம்பலமெ லாமீயு மெனவு மோதும், அரியபலத் தின்கோடி யுறுமெனவு மொருவனைநன் கறையு மாலிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (42)

ஒருவனது பத்தனெழு நதிபதியைப் பருகினன்மற் றொருவ ேனோர்சா, காமதனி லேகதே சம்பிரயத் தனஞ்செய்து கட்டு வித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (43)

ஒருவனோ திமத்துவசற் சுதனைப் பெற்றனனிங் கொருவனந் தப், பிரமனைநற் சுதனுத் திரிபுரத்தை யெரித்தவழிப் பெற்றுக் கொண்டான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (44)

ஒருவனடி யவனிடங்க ருண்டபிள்ளை யதன்வாய்நின் றுயிர்ப் பித்தானீண், டொருவியுயர் தருமபுரத் தொருவனுறீஇ யழைத் தனனுண் டுறுசே யிந்த, இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (45)

ஒருவனுயர் பதியெனவு மந்நியன்பத் தினியெனவு மோங்கு சான்றவ், அரிகரபுத் திரனெனவு முலகினனி பிரசித்தி யடைத லானிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (46)

ஒருவனையங் குயர்விசுவே சுரனென்று மொருவனைவிச் சுவமே யென்றும், பெருமைபெறு வேதாந்த வாக்கியங்கள் பிரித் தினிது பேசா நிற்கும், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண் மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (47)

ஒருவனிடங் கரையழித்துக் கசேந்திரனை யளித்தானிவ் வுலகைக் கொல்லும், பெருமையுறு மந்தகனை யழித்தொருவன் முனிமகனைப் பெரிதளித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (48)

காமதனிற் றரித்தனன்கோ வர்த்தனவத் திரியொருவன் காரக்கி ரத்தில், திருணமென வொருவன்வரை களினுயர்ந்த மேருவென்மா திரந்த ரித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (49)

ஒருவனளி யொடுதனது விழிமலரை யீந்ததனு லுவந்தி யார்க்கும், அரியதிறற் சக்கரமு மம்புயகேத் திரமுமா னவற்களித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (50)

ஒருவ்னனி கீழ்ப்படுத்தி னன்றுரச னும்பலியை யொருவ னல்லர், தரவையுறீஇக் குபேரனுந் தாசனைமேற் படுத்தினன் தனத்தினுலிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருதவுலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (51)

ஒருவனு விலையினனி துயின்றுன்று மதகுணத்தி னெருவன் ஞான, வரமுறுசத் துவகுணத்தின் வடவிருக்க மூலமதின் வதிந்தான் மற்றிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக் மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (52)

ஒருவனிலா டந்தனின்மண் தரித்தனனற் றிலகமா வொருவ னேனுங்கு, சாருளுயர் வன்னியைநெற் றியிற்றரித்தான் றிலகமென வீண்டுச் சொற்ற, இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (53)

ஒருவனூர மதனில்வன மாலிகையை யணிந்தனனுங் குலக ளித்த, பிரமர்கடஞ் சிரநிரைக ளொருவனணிந் தனனூரத்திற் பிணைய லாவிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (54)

ஒருவனநு சரிக்கப்பெற் றனிமுகோ பாலரா லொருவன் மேன்மை, மருவுறுகோ பாலர்களா னனியநுச ரிக்கப்பெற்றனிவ் வையத், திருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (55)

ஒருவனனு தினமுகவ நீதமுவந் துண்டனன்மற் றொருவ னுழ்ந்த, பரவைதனி லெழுந்தமரர்ப் பயமுறுத்து காளமதைப் புருகி னனிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (56)

ஒருவனரி ணமதிச்சித் துருக்கானந் திரிந்தனனோ ரிடத்துஞ் செல்லா, தரிணமொரு கரதலத்திற் றரித்தனனொ லொருவனுயு ரமரரேத்த, இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (57)

ஒருவனிரா வணனாலிங் கபகரிக்கப் பட்டமனை யுற்றான் குற் றம், வருதலிலா மனையவளை யொருவனர்த்த சரீரமா மருவப் பெற்றான், இருவர்தமி லெவ்வனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (58)

பரவையினை வரைகள்கொடு பந்தனஞ்செய் தானொருவன் பகரு மச்சா, காமசுரர் திரிபுரந்தீக் கொளுவவுயர் சாதியா னொரு வன் கண்டான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (59)

ஒருவனிழி கிராதனது சரத்தினான் மரித்தனன்மற் றொரு வன் பற்றார், திரிபுரங்க டமைச்சிரிப்பாற் பொடிபடவே நனி புரிந்து சீரை யுற்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (60)

ஒருவனூறு தன்கருமம் புரிவித்தான் வானரத்தா லொருவன் தூய, சுரபதிக டமைக்கொடுதன் காரியத்தைப் புரிவித்தான் றொல்லை ஞாலத், திருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (61)

சரயுநதி யிடைவீழ்ந்தங் கிறந்தனனா லொருவனன் னியனற் சங்க, மருவுறுமத் திரிபதகை நதியைவட நிகர்சடையின் மாண வைத்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசை த் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (62)

ஒருவனருச் சித்தனன்சே தவிற்சிவனை யந்நியனிவ் வுலகி னென்றும், வருமரியர் காணவருளிராமநா தப்பெயர்கொ டவண்வ திந்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி ப்படுவா மன்றே. (63)

பரவைதனி லொருவனனி மற்சவுரு வெடுத்துழன்றான் பக ரும் வீரத், தொருவனினி துறத்துவச மென்னவுயர்த்தா னுததி யுலா முயர்ந்த மீன்மற், றிருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (64)

ஒருவனுறு கபடிவடு வென்றுரைக்கப் பெற்றனனிங் கோங்கு ஞானம், மருவொருவ னுலகினுயர் வித்தியா குருவெனவந் திக்கப் பெற்றான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (65)

ஒருவனர சிங்கவவ தாரமுறீஇ யிரணியன துயிர்செகுத் தான், சரபவவ தாரமுறீஇ யொருவனவ னுயிர்செகுத்துத் தாழ்த்தி னனிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (66)

ஒருவனிழி மகடூவாந் தாடகையை வதம்புரிந்தா னொருவன் சாலும், முராணுறுமந் நிசாசரிந் திரனுகு மந்தகனை முருக்கி னனிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (67)

ஒருவனவ னிராவணனைக் கோறற்கட் பேராற்ற லுடையன், பாரிற், சருவவுல கழிலய மாகும்வழிப் போற்ற லொருவன் சாரும், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படு வா மன்றே. (68)

ஒருவனுல கினின்வாசு தேவனெனப் பிரசித்த னொருவன் தேவர், பரவுமகா தேவனெனப் பிரசித்தி பெறுமுலகிற் பகரா நின்ற, இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படு வா மன்றே. (69)

ஒருவனொரு சரணத்தாற் சகடமதை யுதைத்தனனன் னியனு யர்ந்த, சரணமெனுஞ் சரோருகத்தி னகநுதியாற் சைலமதை யுதைத்தான் சாற்றும் இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன் மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடை ந்துவழி படுவா மன்றே. (70)

ஒருவனவ னுலகமூன் றையுமுறுமூன் றடியாக்கி னொருத் தன், மருவுமொரு மூன்றுலகைப் பதத்தினடி யாற்சாடி வருந்தச் செய்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (71)

ஒருவனது ரூபந்தா மதத்துவத்தை யடைந்துளதிங் கொரு வன் ரூபம், பெருமையுள சாத்துவிகத் துவத்தையடைந் துளதெ னவே பேசு நூல்கள், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன் மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடை ந்துவழி படுவா மன்றே. (72)

ஒருவனைத் திரவனலாற் றகித்தவுரு வுடையசுத னுடைய னேகன், சிரமுறுசா சுவதாயு ளுடையசுத னுடையனெனச் செப்ப லுற்ருன், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (73)

தரணியகழ்ந் தனனொருவன் வராகவவ தாரமுறீஇ யொரு வன் தாவில், திரிபுரத்தை வேறற்குத் தரணியதை யிரதமா கச் செய்தானிவ், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (74)

சிரசினுறு பூடணமாக் கினனொருவன் சிகாவளயிஞ் சத்தைத் தேர்ந்த, ஒருவனவ விரவரசை யொருசிரபூ டணமாக்கி யுற்ரு னீங்கிவ், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படு வா மன்றே. (75)

ஒருவனிழி சனனமாஞ் சூகரமாய்ப் பிறந்திறந்திங் குழன்ரு னொருங்கு, சரபவவ தாரமெடுத் தொருவனுல கிற்சயமே சாரப் பெற்ருன், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படு வா மன்றே. (76)

ஒருவனொரு வதனத்தாற் பொலிந்தனனன் னியனொப்பி லீசா னந்தற், புருடமகோ ரம்வாம மாதியைந்து வதனங்க ளாற் பொ லிந்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (77)

ஒருவனரன் பாற்பெற்ற திகிரிமுத லும்படையா னுற்றா னாற்றல், பாசமுத லாஞ்சருவ வாயுதங்க ளாரொருவன் படைத்தா னாற்றல், இருவர்தமி லெவனதிக னென்னவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (78)

ஒருவன்று சரணத்தி னுறுதூளி யாற்சிலையிங் கொருபெண்ணாயிற், றொருவன்று திருவுருவ மொப்பிலா டூஉமகடூஉ வருவேயாயிற், றிருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (79)

ஒருவனொன்று திகிரியினைப் பெற்றுலகங் களைப்புரந்தா னுவமையில்லர், வாமுறுசக் கிரவர்த்தி யொருவன்வயத் திகிரியினை மாண்பி னீந்தான், இருவர்தமி லெவனதிக னென்னவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (80)

அரனொரு சராசனத்தை முரித்தனனா லொருவனன்னியன வன்புத், திரனென்னும் பிரமனது சீராருஞ் சிரம்வருந்தச் சேதித் தானிவ், விருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (81)

ஒருவனவன் மூன்றுபத முடையனெனப் பிரசித்த னொருவன் பத்தன், சரணமொரு மூன்றுடைய னெனவுலகிற் பிரசித்தி பெறுவன்சாற்றும், இருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (82)

ஒருவனய வதனனெனப் படுவனுய ரன்னியஞேங்கார மான பெரியவிப வதனனெனப் படுமவற்புத் திரனைப் பெற்றுக் கொண்டான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (83)

ஒருவனுயர் நான்முகனைப் புத்திரனைப் பெற்றனனிங் கொருவனன்னுன், வெருவரநீள் சிறையினிட்ட வறுமுகனைப் புத்திரனை வியக்கப் பெற்றுன் இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (84)

ஒருவனுயர் சுருதிகளை யெடுத்துவிதி தனக்களித்தா னெருவனேனும், சுருதிகளைப் பரியாக்கி அவ்வலரோன் றனைச்சூத னகச் செய்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (85)

ஒருவனனி நரகனெனு மசுரனைக்கொன் றுனுலகி னுயரவீசி, நிரயமுத லநேககர கங்களையிங் கொருவனனி நீக்கினனிவ், விருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (86)

ஒருவனியா சகனுகும் பலியினையா சித்தனன்மற் றொருவனெப்பில், இருமையுறு சௌக்கியத்தை யெளிதினடி யவர்கடமக் கென்று மீவன், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (87)

ஒருவனவன் கோக்களைப்பா லனஞ்செய்வோ னாய்விளங்கி னானொருத்தன், வரமுறுநல் விடபமதிற் கதிபதியாய் விளங்கினான் வயங்கா நின்ற, இருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு; மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (88)

ஒருவனவ னேமியினைத் தரித்துலகங் களைப்புரந்தா னொருவ னொப்பில், பாசதனைத் தரித்துலகங் களைச்சாலச் சிட்சையது பண்ணி னானிவ், இருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (89)

ஒருவனுயர்ந் தேரனருளாற் சிலபோக மீவனிவ னொருவன் வாய்ந்த, தெரிவரியே பாகமனைத் தையுமுயர்மோக் கத்தினையுஞ் சிறக்க வீவன், இருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (90)

ஒருவனது தொண்டர்கு டுண்டகா யத்தினர்மற் றொருவன் தொண்டர், பெருமையையு மிருதுவையு முடையவி பூதியைத் தரித்த பேர முள்ளார், இருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (91)

ஒருவனிழி கோபியரைப் புரந்தனன்கோ வர்த்தனமா மோங்க முங்கித், திரமுறுமற் றொருவனுமை மேருகிரி யைத்தாங் கிச் செகம்பு ரந்தான், இருவர்தம் லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (92)

ஒருவனரவிந்தமொருகரதலத்திற் றரித்தனன்மற் றொருவன் வாய்ந்த, திருவுறுசித் திரபானு வுயர்காத்திற் றரித்தனனற் பிற லோற் போற்ற, இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனே யடைந்து வழி படுவா மன்றே. (93)

ஒருவனருச் சுனற்கிரத மோட்டியே சயமளித்தா னொருவ னந்தப், பெருமையுறு மருச்சுனற்குப் பாணமளித் துப்பெரிது சயம ளித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மை யிசைத் திடுக மாசு, மருவதலி லறிவுடையீ ரியாமவனே யடைந்து வழி படுவா மன்றே. (94)

ஒருவனொடிப் போதினிறேக் காலரியை முருக்கினனொருவ னுய்ந்து, விரிகரத்த வுகிர்களினற் சத்துருவை மிகவருந்தி முருக்கி னன்வே, றிருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனே யடைந்துவழி படுவா மன்றே. (95)

ஒருவனம தடலின்மணி பூரகத்தா னத்துறையு மொருவ னேங்கு, சிரசினுறு சகச்சிரமாந் தளமுடைய கமலத்திற் றிகழு மாலிவ், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனே யடைந்துவழி படுவா மன்றே. (96)

ஒருவனிரு டியர்களிடத் துபதேசம் பெற்றனன்மற் றொருவ னந்த, இருடியர்க ளிடங்குடிகொ ளஞ்ஞான நீக்கியினி துபதே சித்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் தண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனே யடைந்துவழி படுவா மன்றே. (97)

ஒருவனுப மன்னியன்பாற் சிவதீக்ஷைப் பெற்றனன்மற் றொருவனன்ற, வாமுறுமவ் வுபமன்னி யன்பருகப் பாற்கடலை வழங்கி னனிவ், விருவர்தமி லெவனதிக னெனவுகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (98)

ஒருவனிடபத்தினுரு வெடுத்தொருவற் றாங்கினனொருவ னன்று, விரித்தலைய வவ்விடபத் தேறியூர்ந் தானிந்த விதத்தி னனிவ், விருவர்தமி லெவனதிக னெனவுகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (99)

ஒருவனுயர் தசபுரா ணங்களினாற் றுதிக்கப்பெற் றானொருத் தன், கருடமுத லாநான்கு புராணங்க ளாற்சிறிது கழறப்பெற்றான், இருவர்தமி லெவனதிக னெனவுகித் தன்மையிசைத் திடுகமாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (100)

ஒருவனுயர் விபூதிமா னென்றுரைக்கப் பெற்றனன்மற்றொரு வனுயர்ந்த பிரமன்முத லவரோடு விபூதியெனச் சேர்த்துரைக்கப் பெற்றானிந்த, இருவர்தமி லெவனதிக னெனவுகித் தன்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (101)

ஒருவனுயர் காயத்திரிக்கான்மா வெனப்பெற்றா னொருவ னந்த, வுரமுறுமான் மாவினுக்கந் தரியாமி யாமென்ன வயங்கினா னிவ், விருவர்தமி லெவனதிக னெனவுகித் தன்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (102)

ஒருவனால கினிற்பிரம னானேயென் றகந்தையுற்ற னுற மன் றேறற்கங், கருளினொடு மொருவனடி யவனகந்தை நீக்கி னனி யருள்பு ரிந்தான், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (103)

ஒருவனையோங் கியாகாதி பதியென்று மொருவனைகல் லியாக மென்றும், பெருமைபெறு வேதவாக் கியங்கணனி பிரித்தினிது பேசா நிற்கும், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசை த் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழிபடுவா மன்றே. (104)

ஒருவனசே தனமாகு மாயாசன் னியதேக முறுவன் மோக்க, மருவவரு ளொருவனுயர் ஞானசரீ ரத்தையுற்று வயங்கு மாலிவ், விருவர்தமி லெவனதிக னென்னூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (105)

ஒருவனுறு மிருபத்தைந் தாந்தத்து வத்தின்கீ ழொருவனோ ங்கு, பிருதிவியே முதன்முப்பத் தாறுதத்து வத்தின்மேற் பிறங் கா நிற்கும், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (106)

ஒருவனது மனுவான்பே ரோங்காரத் தொடுமியைந்தெட் டெழுத்தா யோங்கும், பெருமையுறு மொருவன்மனு வஃதின்றி யைந்தெழுத்தாம் பெயர்பெற் றோங்கும், இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவா மன்றே. (107)

தெரிவரிய சுருதியொரு வன்றனைநற் பசுவென்றுஞ் சிறப்ப துற்ற, ஒருவனையொப் பிலாவுலகிற் பசுபதி யென்றுஞ்சால வுரைக்கு மிந்த, இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மை யிசைத் திடுக மாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்து வழி படுவா மன்றே. (108)

ஓங்காரப் பொருளாயத் துவிதமாய் நித்தியமா யுலகந் தன்னைப்
பாங்காரு மாயையினின் றுதிப்பித்து நிருத்தியதன் பாலொடுக்கி
நீங்காது நிறைந்தருளும் பசுபதியை நிருமலனை நிலவா நின்ற
ஆங்கார நீங்கினர்த மகத்திலகு பாசிவத்தை யகத்து வைப்பாம்.

அரிகரதாரதம்மியம் முற்றிற்று.

ஸ்ரீ மெய்கண்டதேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.

௳

திருச்சிற்றம்பலம்.

# சிவனே பசுபதி

சிவனே புவனத் தவமறத் தியானம்
பணற்குரி யானெனற் கணற்கரு முனிவரும்
உவமனின் ஞானம் பவமறத் தருவோன்
என்றற் குலகத் தொன்றலில் சுகனும்
சான்றவர் தம்மா லென்றுகனி வழிபடத்
தக்கோ னெனற்குப் பொக்கமி னிகமமும்
தொண்டரை யஞ்சினங் கண்டக மகிழப்
புரப்போ னெனற்குத் தருக்குறு மறலியும்
அழிவில னென்றற் கிழிவுறு பிரமர்கள்
சிரங்களை கோத்து வரமுறு மாலையும்
அடிமுடி யுணரா வடிவின னென்றற்
கரிபிர மர்கடம் முருவ மெனப்படும்
ஏனமு மன்னமு மெனுமிவ் விரண்டும்
சான்றாய் நிற்றலி னான்றோர்
அவனே பசுபதி யெனவறை குவரே.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பரப்பிரம விளக்கம்.

வரகவி காளமேகப்புலவர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பரப்பிரம விளக்கம்.

ஆதிமத்தியாந்த ரகிதமாயும், அருவுருவமில்லாததாயும், நிர்மல நிராமயமாயும், நிஷ்களப் பொருளாயு மிருக்கிற பரமசிவமே படைத்தல் முதலிய தொழில்களை நடாத்தும்பொருட்டுப் பிரம, விஷ்ணு, ருத்திராதியரைப் படைத்தது மன்றி, அடியார்கள் உய்யும் பொருட்டு மூர்த்தி தலம் தீர்த்தமாகத் திருவருவங் கொண்டு எழுந்தருளியிருக்கிறது. அவற்றுட் சிவதலங்கள் பலவாம். அவற்றுள், ஆயிரத்தெட்டுச் சிவதலங்கள் சிறந்தன. அவற்றுட் பஞ்சபூத ஸ்தலங்களு ளொன்றாய்ச் சோழதேசத்தில் விளங்கியிருக்கின்ற சம்புகேசுவரமென்னும் திவ்ய ஸ்தலத்தில், மாலு மயனுங் காணுதற்கரிய சிவபெருமானுக்கு வழியடிமை பூண்டு தொண்டுசெய்துவருங் கணிகையர் திலகமாகிய மோகனாங்கி யென்பவள் ஆண்டுதோறும் (தனுர்மாதத்தில் நடாத்திவரும் மாணிக்கவாசகசுவாமிகள் மகோற்சவத்தில் ஒருநாட் சிவபெருமான் சந்நிதானத்தில்) உங்கையிற் பிள்ளையென்னும் பாடலைப் பாடிவருகையில் அதில் "எங்கொங்கைநின்னன்ப ரல்லார்தோள்சேரற்க" என்னும் திருவெம்பாவை யோதி நடனஞ்செய்துகொண்டு வரும்போது, தன் பக்கத்தில் நடித்துக் கொண்டுவருகிற தாயத்தளாகிய மற்றொரு கணிகையானவள் மோனாங்கி சொல்லிய அத்திருவெம்பாவையைக் கேட்டுக் குலுக்கெனநகைததுச் சீரங்கத்துச் சுயம்பாகி வைஷ்ணவப் பிராமணராகிய காளமேகப்புலவரைச் சேர்ந்திருக்கின்ற நீ வாசா கைங்கரியமாக இத்திருவெம்பாவை எதுக்கோதுகின்றா யென்றிகழ்ந்து ஏளனஞ்செய்தார்; உடனே மோகனாங்கி நாணமுற்றுக் கிருகத்துக்கு வந்து தன் தாயையுந்

தாதிமார்களையும் அழைத்து இன்று முதல் காளமேகப்புலவர் நம்முடைய வீட்டிற்கு வரவேண்டுவதில்லை, ஒருவேளை அவரிங்கு வருவாரேல், நீங்கள் அவரோடு வசனிக்க வேண்டுவதில்லையென்று தலைவாயிற் கதவைச் சாத்தித் தாழிட்டு வைக்கும்படி கட்டளையிட்டுப் பள்ளியறையிற்சென்று சயனித்துக்கொண்டாள். உடனே அன்றிரவில் காளமேகப்புலவர் வழக்கப்படி வந்து கதவைத் தட்டினார். உள்ளிருந்த தோழிமார்கள் கதவுக்குப் புறம்பே நின்று தங்கள் எஜமானி கட்டளையிட்டிருந்ததைச் சொன்னார்கள். அவர் அதுகேட்டு ஆகுலித்து மனக்கலக்கத்தோடு மோகனாங்கி சயனித்துக்கொண்டிருக்கும் பள்ளியறையின் தெருப்புறத்துச் சாளரக் கதவைத் தட்டினார். அவ்வரவங்கேட்டு அவள், யாரென்று வினவ, யாம் காளமேகப்புலவரென்ன, நீவிர் இனிமேல் எமக்குப் புறம்பென்று சொல்ல, அவர் என்ன காரணமென்று கேட்க, மோக்ஷகர்த்தாவாகிய பசுபதியென்னும் சிவபெருமானுக்கு வழியடிமை பூண்டொழுகுகின்ற யான் இனிச் சிவனடியார்களைச்சேருதலேயன்றி, ஆன்மகோடிகளிலொருவராகிய விஷ்ணுவையும், அவரடியார்களையுங் கனவினும் நினைக்கிலேனென்றும் "சீயந்துரத்திவரினுஞ் சீரங்கத்துட் செல்லாதே" என்றும், சீரங்கம் பசித்துவாடினுஞ் சீரங்கத்திற் சேராதே" யென்றும், "ஆறங்கமோதியுணர்ந்தோர் சீரங்கத்தணுகா"ரென்றும், வழங்கி வருகின்ற பழமொழிகளையுஞ் சிவபெருமானுடைய மான்மிய ரகசியங்களையும் ஆராய்ந்தெடுத்து ஓதினாள். இவர் ஆனந்தமாகக் கேட்டு, மாயவன் சமயத்து மாயையுணின்று நீங்கிச் சிவகடாக்ஷத்தினாலே தனக்குள் உண்மைவிளங்க வழியறியாக் கன்று கழிவழீஇச் சென்றதுபோல் இதுகாறும் வாளாமயங்கிக் காலங்கழித்தோம் என்று நினைத்து இனிச் சைவனாவதற்குச் சந்தேகமில்லை. "கரும்பு தின்னக்கூலி வேண்டுமா" என்றார். நீவிர் சைவராவதற் கடையாளம் முன்னர்ச் சிவதீக்ஷை பெற்றுக்கொண்டு சைவராகிச் சிவபெருமான் விஷயமாக ஓர் அந்தாதிப்பிரபந்தம் சொல்ல வேண்டுமென்ன; அவ்வாறே அவர் சம்புகேசுவரச் சிவபெருமான்மீது அந்தாதிப் பிரபந்தமுஞ் சித்திரமடலுஞ்சொல்லி அவற்றை அரங்கேற்று

விக்கும்போது, சீரங்கத்து வைஷ்ணவர்கள் கேள்விப்பட்டு விரைந்துவந்து வைஷ்ணவத்திற்குரிய மோகன சாஸ்திர நூற்பிரமாணங்களையும், ஆழ்வார்கள் செய்த பிரபந்தங்களையுங்கொண்டு வாதாடத் தொடங்கிய வினாக்களுக்கு, மகாகவி காளமேகப்புலவர் திருவாய் மலர்ந்தருளிய விடையாகிய விஷயங்களை மறுத்துக்கூற அறியாதவர்களாய்க் 'குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டாற்போலவும்'' "அன்னநடை நடக்கப்போய்த் தன்னடையு மறந்தாற்போலவும்'' வாய்த்ததென்றெண்ணித் தம்மிற்றாமே வெறுப்படைந்து எவ்விடத்தேனும் மகா கவியாகிய காளமேகப் புலவர் வாக்கினால் நம்பெருமாள்மீது பாடல் பெற்றுக்கொள்ள வேண்டுமென்னும் எண்ணங்கொண்டவர்களாய்த் திடுக்கென எழுந்திருந்து தங்கள் தங்கள் கிருகத்திற்குச் சென்றார்கள். அப்பொழுது வேதாகம சாஸ்திரமுணர்ந்த வைஷ்ணவர்கள் இருநூற்று முப்பதிற்றெழுவர் சிவதீக்ஷை பெற்றுக்கொண்டு சைவரானார்கள்.

சிலநாள் கழிந்தபின்பு ஒருநாள் காற்றுமழையுங் கலந்து இடியிடிக்கும்போது மகாகவி காளமேகப் புலவர் சீரங்கத்துப் பெருமாள்கோயிலிற் புகுந்ததைக் கண்டு, வைஷ்ணவர்கள் விரைந்தோடிவந்து அக்கோயிற் கதவைச்சாத்திக்கொண்டு இப்பொழுது திருமாலைப் பாடவேண்டுமென்றார்கள். அதற்குப் புலவர் (பேரங்கமில்லானைப் பாடின நாவாற் சீரங்கமில்லானைப் பாடேனென்றார்) நம்பெருமாள்மீது ஓர் சீரேனுஞ் சொன்னாலன்றி இக்கதவைத் திறவோமென்றார்கள். அதற்கவர் அக்கோயிலினின்று வெளிப்படவேண்டுமென்னுங் கருத்தையுட்கொண்டு "செங்கண்மா'' லென்றார். வைஷ்ணவர்கள் உளமகிழ்ந்து கதவைத்திறந்துவிட்டார்கள். உடனே வெளிப்புறத்தில் வந்து முன் சொல்லிய சீரைத்தொடங்கிக்கூறிய செய்யுள் :—

செங்கண் மால்கரத் திகிரி யேதது
சிவபி ரானளித் திட்டதே
செருவில் வாணன்தோள் கொய்த தம்மான்
திருவ ருள்கொடன் றேமலர்

அங்கை யார்கபா லம்நி றைந்ததோ
அன்று கேசவன் குருதியால்
அயன்கு லத்துதித் தேய தோட்சசன்
நாம முற்றதற் கென்சொல்வீர்
எங்கள் சங்கரன் யாவு மாய்த்தநாள்
எழில்வை குந்தமன் றுள்ளதோ
இசைகொள் கங்கைநீ ரத்தில் வியாசனீட்
டிட்ட கையசை யாததென்
பொங்கு நஞ்சுமுண் டரியொ டண்டரைப்
புரந்த தில்லையோ வாதலாற்
பொன்னி னம்பலத் தாடு வோனலாற்
புகழ்கொள் தெய்வம்வே றில்லையே — என்பது அது.

பின்பு ஒருநாள் அவ்வாறே கண்ணபுரத்துக் கோயிலிற் சென்றபோது கதவைச் சாத்திக்கொண்டு திருமாலைப் பாடா விட்டால் விடோமென்றார்கள். 'கண்ணபுரமாலே' யென்றார். என்னவே, கதவைத்திறக்க, வெளியில்வந்து முன்சொல்லிய சீலைத் தொடங்கிக்கூறிய பாடல்.

வெண்பா.

கண்ணபுர மாலே கடவுளினு நீயதிகம்
உன்னிலுநா னேயதிக மொன்றுகேள்—பன்னரிய
உன்பிறப்போ பத்தா முயர்சிவனுக் கொன்றுமிலை
என்பிறப்பிற் கெண்ணே யிலை.

---

பின்பு, ஒருநாட்கூடி வாதிக்கத் தொடங்கினார்கள்.

**எங்கள் திருமால் மோக்ஷகர்த்தாவாதலால்**
**அவனே பரத்துவன் என்றதற்கு விடை.**

கோதமனார் சாபத்தாற் கோதின் முதுமறையோர்
மாதவனைப் பூசித்து மண்ணணிந்தே—பாதகராய்ப்
பொங்கு நரகம் புகுவரோ லத்திருமால்
எங்குப் பரத்துவனு மே. (1)

*கௌதமமகாரிஷி முதலானவர்கள் கொடுத்த சாபத்தை விமோசனஞ் செய்யாத திருமால், மோக்ஷகர்த்தா வென்றதெங்ஙனம்? உலகத்திற் பல கடவுளுண்டோ? ஒரு கடவுளேயாம். அக்கடவுள் பூலோக கைலாசமாகிய தில்லைச்சிற்றம்பலத்துள் எழுந்தருளியிருக்கின்ற நடேசரே யன்றி வேறு கடவுளில்லை யென்ன, அதுகேட்டு வைஷ்ணவர்கள் பின்னும் வாதிக்கத் தொடங்கிய வினாவிற்கு விடைகள் வருமாறு—*

**எங்கள் பரவாசுதேவனே இரக்ஷகன் என்றதற்கு விடை.**

*கந்த மலர்ப்பிரமன் காம னெனுமிரண்டு*
*மைந்தர் தலையுடல்போய் மாய்ந்தகாள்—வந்துதவி*
*செய்யா திருந்ததிரு மால்காத்தற் கேதுசொன்மின்*
*பொய்யாய நூல்போற்று வீர்.* (2)

**சர்வ சங்காரகாலத்தில் விஷ்ணுவன்றி மற்றைத் தெய்வங்கள் மாளுவர் என்றதற்கு விடை.**

*சங்கார காலத்திற் சம்புவன்றி மான்முதலோர்*
*மங்கா திருந்தனரோ வாய்திறமின்—அங்கயிலை*
*பாதத்துட் பட்டதுமால் பாரளந்த போதென்றே*
*ஏதத்துக் குள்ளாகு வீர்.* (3)

**சக்கரவர்த்தி திருமகன் மனிதனல்லன் என்றதற்கு விடை.**

*ஓதுமிலங் கைக்கோ னுதவியசேய் வஞ்சகமா*
*வாதைப் படுத்தவெண்ணி யேமாய—சீதையெனும்*
*கூரா மயில்விழியைக் கொல்லப்பார்த் தேயழுத*
*சீராமன் றுனோநந் தே.* (4)

**திருமால் இராவணசங்காரஞ் செய்தார் என்றதற்கு விடை.**

*மலையா யணுவாய் மகிமுதலாய்த் தானாய்*
*நிலையாய மெய்ப்பொருளாய் நின்ற—மலைவில்லான்*
*தன்னுபதே சத்தன்றோ தாசரதி யன்றிலங்கை*
*மன்னனைமாய்த் தானென்னு மாண்பு.* (5)

ஓது மிலங்கையர்கோ னேங்குவெள்ளி வெற்பைமுனம்
போத வெடுக்கப் புராந்தகன் றன்—பாதப்
பெருவிரலா லூன்றவந்நாட் பேதுற்ருேன் றன்னைச்
செருவினிற்செற் ருேன்தேவ னே. (6)

**திருமால் விபீஷணனையும் கஜேந்திரனையும் காத்தார் என்றதற்கு விடை.**

வேதந் தவமுனிவர் விண்ணோரைச் சான்றுகொளா
தேதமிரு கத்தோ டிராக்கதனைப்—பூதலத்திற்
சான்றெனவே கொண்டந்தோ சாதிப்பீர் நால்வேதம்
ஊன்றியறி யாவுணர்வி னீர். (7)

**திருமால் நித்தியர் என்றதற்கு விடை.**

அண்டர் கடல்கடைந்த அந்நாளுண் டானவிடம்
கண்டமட்டிற் கண்ணுதலோன் கண்டத்திற்—கொண்டிலனே
அங்கமலை வாணியெனும் ஆயிழையார் தங்கழுத்தின்
மங்கலநாண் ஏதுரைமின் மற்று. (8)

தக்கன் மகத்திறந்த தாமோ தரன்மனைவி
தக்கமல ராலரன்றன் தாள்பணிந்தே—மிக்கதிரு
மாங்கலியப் பிச்சை பெறவேண்டி வாழ்த்திடலால்
ஆங்கவன்மீண் டுண்டாயி னன். (9)

**திருமால் சர்வஞ்ஞர் என்றதற்கு விடை.**

ஈருருவ மொன்ருய் யிருத்தலால் நாளை நீ
தாருரத்திற் பூண்டு சமர்செயிலோ—பாரறிய
வாலி மடிய வதைத்திடுவேன் என்றுரைத்த
மாலறிஞ் ஞவனோ மற்று. (10)

**பிரம ருத்திரேந்திராதியர் கண்ணனுலுண்டாக்கப்பட்டார் என்றதற்கு விடை.**

கற்பமொன்றிற் கண்ணுதலோன் காலில் பிறந்துமறு
கற்பத்திற் கஞ்சன் குதத்தினிலே—உற்பவித்த

*அச்சுதனைக் கண்ணனெனல் அம்பகப்பூ வாலரனை*
*அர்ச்சித்த காரணத்தி னல்.* (11)

**சிவபெருமானுக்குத் திருமால் சூலாயுதம் கொடுத்தார் என்றதற்கு விடை.**

*வீறும் விழிமலரால் வித்தகன்தாள் பூசித்துக்*
*கூறரிய சக்கரமால் கொண்டதற்கு—மாறன்றோ*
*ஆலிலையிற் கண்டுயில்வோன் ஆலமுண்ட கண்டற்குச்*
*சூலமளித் தானென்னுஞ் சொல்.* (12)

**திருமால் இரணியசங்காரஞ்செய்து, இந்திரன் முதலோரைக் காத்தார் என்றதற்கு விடை.**

*கனக னுரங்கீண்ட காலத்திற் போர்வில்*
*அனக னுடல்செற்ற வரனர்—தனியுலகிற்*
*பெற்றி கொளுஞ்சரபப் பேருருக்கொ ளாவிடின்மால்*
*செத்தவிடம் புற்செழிக்கு மே.* (13)

**திருமால் பத்மாசுரனை வென்றார் என்றதற்கு விடை.**

*கஞ்சன் விடுக்கவரும் காலய னைக்கண்டே*
*அஞ்சி யொளித்திருந்த வச்சுதன்முன்—மிஞ்சுபத்மா*
*சூரன் றனைவென்ற சூரனென்றால் தொல்லுலகில்*
*ஆருவகை கொண்டுநகை யார்.* (14)

**திருமால் சத்துவகுணர் என்றதற்கு விடை.**

*நெடுந்துயில்வஞ் சஞ்சோம்பு நீதிவழு பேருண்*
*கடுங்கோபம் பொய்மறதி காமம்—உடம்பு*
*கரியநிறங் கள்ளங் கலந்திருத்த லாலே*
*அரிதா மதகுணத்தா னும்.* (15)

*அகஞ்சத் துவம்புறத்தாந் தாமதமுக் கண்ணற்*
*ககந்தா மதம்புறத்தாஞ் சாந்தம்—புகலரிக்கென்*
*றுத்தரா மாயணமே யோதுதலால் வேறுமோர்*
*உத்தரமின் னும்வேண்டு மோ.* (16)

பொறைஞானம் வாய்மை பொறியடக்கல் மேன்மை
நிறைமோனம் வெண்மை நிறமே—பெறுஞ்சுத்த
தத்துவத்தின் மெய்ப்பொருளாய்த் தானே சுயம்பதனாற்
சத்வகுணம் சங்கரற்கே தான். (17)

திருமால் சிவனைக்குறித்துத் தவஞ் செய்யவில்லை என்பதற்கு விடை.

வேதமுடி வாஞ்சிவனை வேண்டியுபா சித்ததனால்
மாதவனென் றோர்நாமம் வையகத்தில்—வேதன்
குதத்துதித்த மாலுக்குக் கூறுகின்றார் பொய்ந்நூல்
பிதற்றியுழ லும்பேய ரே. (18)

திருமால் அச்சுதன் என்றதற்கு விடை.

மாண்டு பிறந்துழலும் மாதவனை அச்சுதனென்
றீண்டுசொல லாடசப்பே ரெய்தல்போற்—பூண்டினுக்குள்
அற்பமிகு முள்ளிதனை யம்புவியின் மேன்மைபெறு
கற்பகமென் றேகழறல் நேர். (19)

திருமால் செகதீசனுதலால் அவனையே வணங்க வேண்டும் என்றதற்கு விடை.

காலொடுகை யுஞ்சிரமுங் காட்டகத்தே வெந்தபிண
மாலைச் சகநாதம் வைத்தேத்தல்—சூல
மழுப்படையான் பாதம் வழுத்தாதெந் நாளும்
பழிப்பதனால் வந்த பவம். (20)

திருமால் தூணில் அவதரித்துப் பிரகலாதனைக் காத்தார் என்றதற்கு விடை.

கருங்கல்விற் றேரை கலந்திருந்தாற் போலப்
பெருங்கம்பத் துண்மால் பிறத்தற்—கிரும்புவியில்
சின்னஞ் சிறுசேயைத் தேடினீர் சான்றாக
என்னமதி கொண்டோ வியைந்து. (21)

திருமால் செங்கதிரை மறைத்தார் என்றதற்கு விடை.

*சாப மடைந்ததனிச் சக்கரத்தால் வெய்யோனைச்*
*சீபதிமுன் ஞள்மறைத்த தோர்சிறப்போ—மாபுகழ்சேர்*
*செய்ய நளாயனியால் செங்கதிர்பன் ஞள்மறைந்த*
*தையமற யாவரறி யார்.* (22)

*துருவாசன் சாபத் தொடர்பினுல் ஆழி*
*இரவி தனைமறைத்த தென்றே—உரைசெயுமேல்*
*நான்மறையை நன்குணரும் நுண்ணறிவி லீர்வாளா*
*மான்மறைத்தா னென்பீர் மயங்கி.* (23)

திருமால் கல்லைப் பெண்ணுக்கினுர் என்றதற்கு விடை,

*அகலிகையைக் கல்லா வமைத்த முனிவன்*
*புகரில் விமோசனமப் போதே—புகன்றிருக்கக்*
*கல்லுருவைப் பெண்ணுருவங் காட்டினுன் மாலென்றே*
*சொல்லும்வகை யாதோ துணிந்து.* (24)

திருமால் பாஞ்சாலிக்கு மாளாத துகில் அளித்தார் என்றதற்கு விடை.

*பாஞ்சாலி முற்பிறப்பிற் பண்ணவனுற் பெற்றிட்ட*
*ஆஞ்சீர் வரத்தா லவைதனிலே—வாஞ்சையுற*
*மாளாத் துகிலவட்கு வந்ததைமா லீந்ததென*
*வாளா வுரைப்பீர் மகிழ்ந்து.* (25)

திருமால் வாலியை வென்றுர் என்றதற்கு விடை.

*மாயன் மறைந்திருந்து வாலிதனைக் கொல்லவவன்*
*தூய வனசரனுத் தோன்றியந்த—மாயவனைக்*
*கொன்றகதை பாரதத்திற் கூறக்கேட் டீரிலையோ*
*பொன்றிடுமா லைப்புகழு வீர்.* (26)

**வேதபாராயணம் செய்யத் தொடங்கும் போதும், முடிக்கும் போதும் ஹரிஓம் என்றோதுகின்றோம் என்றதற்கு விடை.**

*வேதபா ராயணஞ்செய் வேதியர்க ளாதியந்தம்*
*ஓதும் பிரணவமே யோதுகின்றார்—மாதவத்தோர்*
*எண்ணும் பிரணவத்திற் கேனரியென் னும்மடைசொல்*
*மண்ணணிந்தீர் கொண்ட வழக்கு.* (27)

**மும்மூர்த்திகள் ஆரால் அவதரித்தார் என்றதற்கு விடை.**

*ஆய வமரர் அறவோரைக் காக்கவும்வெந்*
*தீய வசுரர்தமைச் செற்றிடவும்—தூய*
*விதிமா லுருத்திரனை வெள்ளிமலை நாதன்*
*உதவினனென் றோதுமறை நூல்.* (28)

**திருமால் புருடோத்தமன் என்றதற்கு விடை.**

*தாவு கடலமுதம் தந்திடும்போ தஞ்சாத்தன்*
*மேவிய போதும் விரிதாரு—காவனத்தில்*
*உற்றிடும்போ தும்பெண் ணுருக்கொண்டோ னைப்புருட*
*உத்தமனென் றோதலழ கோ.* (29)

*கோவிந்தன் பெண்பாலே அல்லாமற் கூறுங்கால்*
*தாவில் புருடோத் தமனல்லன்—பூவையர்போல்*
*சீரங்க மாதித் திருத்தலந்தோ றும்வலக்கை*
*சாரவைத்துத் தூங்குதலாற் றான்.* (30)

**காசியிலே மரணம் ஆவோருக்குஇராமதாரகம் உபதேசம் என்றதற்கு விடை.**

*வாரண வாசி மருவியகங் காநதியின்*
*மாரணர்கள் வெள்ளிமலை வாழ்வுபெறல்—சீரார்*
*பிரணவத்தா லன்றோவிப் பெற்றி யுணராது*
*முரணனுகச் சொல்வீர் முனிந்து.* (31)

வேதவியாசர் திருமாலையே பரத்துவனென்றார் என்றதற்கு விடை.

*பங்கயக்கண் மாலைப் பரத்துவனென் றேவியாசன்*
*கங்கைக் கரையுரைத்துக் கைகாவன்—றங்கவற்குத்*
*தம்பிக்க மால்வந்து சங்கரனே எவ்வுயிர்க்கும்*
*எம்பிரா னென்று னிசைந்து.* (32)

*பைந்துளவத் தோனைப் பரத்துவனென் றேயரிய*
*விந்தை மகத்தில் விரைந்தழைத்தே—சந்ததமும்*
*தாழ்ந்த சடைவியாசன் தக்க னெனுமிருவர்*
*வாழ்ந்தனரே வையம் கக.* (33)

வைகுந்த பதவி சிறந்தது என்றதற்கு விடை.

*ஏர்வதரி யாசிரமம் எண்ணரிய மைந்நாகப்*
*பேர்கொண் மலைமேவிப் பின்னுகன்றன்—சீர்படித்து*
*வைகுந் தவப்பயனு லன்றோ மலர்த்துளவோன்*
*வைகுந்தம் பெற்றான் மகிழ்ந்து.* (34)

சீரங்கம்முதலாகிய திருமால்ஆலயஞ் சிறந்ததென்றதற்குவிடை

*பாடண்ட மோகனநூல் பார்மயங்கச் செய்திடுமால்*
*தோட மகலவில்வ நீழறன்னி—மூடிகத்தை*
*ஊர்ந்தோ னடியை உபாசித்த காரணத்தாற்*
*சார்ந்ததுசீ ரங்க தலம்.* (35)

திருமால் யாவராலும் வணங்கப்பட்டவர் என்றதற்கு விடை.

*ஏதமிலாக் கோதமனு ரிட்டபெருஞ் சாபத்தால்*
*மாதவனுர் கோயிலடி வையார்மற்—றோதரிய*
*சைவரொடு வீரசைவச் சாதுரிய ரெந்நாளும்*
*மைவணனை யேத்தார் மகிழ்ந்து.* (36)

காட்டுத் துளவம் கமலமணி மண்ணணிந்து
மாட்டுக்குப் பின்சென்ற மாயவன்றன்—தாட்டுணையைக்
கண்டுதொழுந் தொட்டக் கயவர்க்குக் காலனுல
குண்டென் றுரைக்கு மறை. (37)

**நெற்றியில் திருமண் அணிதல் சிறப்பென்றதற்கு விடை.**

தம்முணர்ந்தோர் நீறுநுதற் சார்பின்றி யேயணிவர்
தம்முணரார் மண்குழைத்துத் தம்நுதலில்—தம்மறிவோர்
ஆடியுளே நின்றுங் கறிவித்த பின்னரன்றே
நாடி யிடுவர் நயந்து. (38)

உற்றநெடு மாலடியை யோதும் அவனடிமை
பெற்றவர்மண் நெற்றியிடல் பெற்றியே—மற்றவன்றன்
பாத மவன்றனது பாலத் திடுவதென்னோ
பாதகஞ்செய் பாடண்ட ரே. (39)

நீறில்லா நெற்றிபாழ் என்றௌவை நீதிநூல்
தேற வுரைத்தாளச் சீர்மையினல்—நீறன்றே
நற்கருமத் திற்காகு நாமங் குழைத்திடுதல்
துற்கருமத் தோர்செய் தொழில். (40)

எற்றுனே ஆழ்வார் இயம்பியநா லாயிரத்துள்
நீற்று னெனவுரைத்த நேர்மைபோல்—வேற்றுமையின்
றோதிடுநா மத்தானென் றேனுரைக்க வில்லையெனில்
ஆதிசைவன் மாலாத லால். (41)

மோசப்பட் டானொருவன் மோசஞ்செய் தோற்கண்டு
பூசப் படாநாமம் போட்டனையென்—றேசுமொழி
வையப்பா வாணர்களு மற்றவரும் பாராட்டல்
ஐயப்பா டேனறிவி லீர். (42)

சடகோபம் சிறந்த தென்றதற்கு விடை.

*அடகோவென் றேபுலம்பு மைய உனக்குச்*
*சடகோப மார்தரித்தா ரென்றே—அடைவாகத்*
*தொல்லாழி சூழ்புவியோர் தொன்றுதொட் டேசுமொழி*
*கல்லா திருப்பதென்ன காண்.* (43)

சங்கு சக்கராங்கம் சிறந்தன என்றதற்கு விடை.

*அருத்திகொளத் தாசர்க் கடலாழி சங்கம்*
*நெருப்பிட் டிருதோ ணிறுவ—வெருக்கொண்*
*டுளம்புழுங்கும் போதி லுரைக்குமந்தி ரங்கள்*
*உளம்புகுமோ சொல்வீ ருவந்து.* (44)

மும்மூர்த்திகளுட் சிவன் அதிகன் அல்லனென்றதற்கு விடை.

*தாங்கியமும் மூர்த்திகளுட் டானும் ஒருவனென்றே*
*வாங்கா துரைக்கு மதியிலீர்—ஓங்காரனைத்*
*தேடி னவன்பரமோ தேடச்செய் தோன்பரமோ*
*நாடி யுரையீர் நயந்து.* (45)

திருமால் பரத்துவன் அல்லனென்று அவ்வாறுகூறுகின்றீரென்றதற்கு விடை.

*கண்ணன் றனையுரலிற் கட்டிமணித் தாம்பினால்*
*புண்ணுறவவ் வாய்ச்சி புடைத்தவடு—வண்மை*
*பொருத்தினருக் கெல்லாம் பொருந்தாமை யான்மால்*
*பரத்துவனென் றெண்ணப் படான்.* (46)

திருமாலொருவனே மோக்ஷகர்த்தாவென்று ஆழ்வார்கள் மங்களாசாசனஞ் செய்திருக்கிறார்கள் என்றதற்கு விடை.

*திருமா லயனரனைச் சிந்தித்த லற்றிப்*
*பெருவானம் பெற்றன னென்றே—குருகூரன்*
*மாற னுரைத்தற்கு மாறுக வேநீவிர்*
*கூறுவது தீக்கொள்கை யே.* (47)

**சிவபெருமானெவ்வாறு பரத்துவனென்றதற்கு விடை**

*அரனையன்றி யேயோ ரணுவு மசையா*
*திருப்பதற்கம் மார னிருக்கப்—பரமசிவன்*
*யோகுசெய்த வந்நா ளுலகி லுயிரனைத்தும்*
*போகம் மறந்த புலர்ந்து.* (48)

*தேவி யரன்விழியைச் செங்கரத்தால் மூடியநாள்*
*மூவுலக முற்றுமிருள் மூடியதால்—தேவனெனும்*
*பேர்படைத்தோர் யாரிந்தப் பெற்றிபெற்றார் பேசிடுமின்*
*பார்மயக்கும் பாடண்ட ரே.* (49)

*பிட்டுக்கு மண்சுமந்த பெம்மானைப் பாண்டியன்கை*
*தொட்டபிரம் பாலடிக்கத் தோன்றும்வடு—பட்டதுசேர்*
*எவ்வெப் பொருளிடத்து மெய்திடலா லார்பரமன்*
*செவ்வ னுரைப்பீர் தெளிந்து* (50)

**வைணவர் விநாயகருக்கு நாமமிட்டு பரம் விஷ்ணுவே யென்று இப்பிள்ளையார் நாமமிட்டுக்கொண்டார் என்றதற்கு விடை.**

*தந்தை பிறந்திறவாத் தன்மையினால் தன்மாமன்*
*வந்து பிறந்திறக்கும் வய்மையினால்—முந்தொருநாள்*
*வீணிக்கு வேலை யெரித்தான் மகன்மாமன்*
*காணிக்கு வந்திருந்தான் காண்.* (51)

## சில தனிப்பாடல்கள்.

**ஸ்ரீரங்கத்து வைணவரும் திருவானைக்காக் குருக்களும் சமயத்துவேஷத்தால் சண்டைசெய்ய அவர்களைச் சமாதானப் படுத்தப் பாடியது.**

*சீரங்கத் தாரும் திருவானைக் காவாரும்*
*போரங்க மாகிப் பொருவதேன்—ஓரங்கள்*
*வேண்டாமி தென்ன விவரம் தெரியாதோ*
*ஆண்டானும் தாதனுமா னவ்.* (52)

**தில்லைக் கோவிந்தராஜர் கால்மாட்டிலிருந்து சபாநாதர் நடனம் செய்வதைப் பாருமென்று வைணவர் அவமதித்துச் சொன்ன போது பாடியது, [கலித்துறை.]**

*ஆட்டுக் கிசைந்தவ ரம்பல வாண ரவர்க்கெதிரே*
*நீட்டிற்று மால்வட பாலினிற் காலென நீர்நினையீர்*
*சூட்டுற்ற முப்புரஞ் செற்றவர் தம்மைச் சுமந்துழுத்த*
*மாட்டுக்கென் னேவிடங் காணீட்டல் சொல்ல வழக்கில்லையே*
(53)

**ஸ்ரீரங்கத்து வைணவர் திருமால் உலகத்தை யுண்டருளின போது சிவன் எங்கேயிருந்தார் ? என்றதற்கு விடை.**

*அருந்தினு னண்டமெலா மன்றுமா லீசன்*
*இருந்தபடி யேதென் றியம்பின்—பொருந்திப்*
*பருங்கவளம் யானைகொளப் பாகனதன் மீதே*
*இருந்தபடி யீசனிருந் தான்.* (54)

**தில்லைக் கோவிந்தராஜர் கோயிலிலிருக்கும் ஐயங்கார் விஷ்ணுவே பரம் என்றதற்கு விடை, [கலித்துறை.]**

*சத்தாதி யைந்தையுந் தாங்காத தெய்வந் தனிமறையும்*
*கத்தா வெனுந்தெய்வ மம்பலத் தேகண்டுங் கண்களிரு*
*பத்தான வன்மைந்தன் பொய்த்தேவி யைக்கொல்லப்பார்த்தழுத*
*பித்தான வன்றனை யோதெய்வ மாகப் பிதற்றுவதே.* (55)

*“ இந்நூல் வெண்பாக்கள் முற்றுமகப்படாமையாற் கிடைத்த மட்டும் அச்சிட்டனம். யாரேனும் முற்றும்வைத்திருக்கிறவர்கள் உதவி செய்வாராகில் சிவபுண்ணியஞ் செய்தோரடையும் பெரும் பயனை அடையாமலிரார்கள்.”*

*என முதற்பதிப்பில் அச்சியற்றி வெளியிட்டிருக்கின்றனர்.*

உ
சிவமயம்.

## தேவாரம்.

—::—

*திருச்சிற்றம்பலம்*

"முந்தைகாண் மூவரினு முதலா னான்காண்
மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத்
தந்தைகாண் தண்கடமா முகத்தி னார்க்குத்
தாதைகாண் தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால் விடையொன் றேறும்
எந்தைகாண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன்காண் அவனென் எண்ணத் தானே."

*திருச்சிற்றம்பலம்.*